

# ஸ்ரீ வேங்கடேச மணிமாலை

இயற்றியவர்

**குற்றாலம் வள்ளிநாயகம்**

(கவிஞர் மதுபாலிகா)



# திருப்பதி ஸ்ரீ வேங்கடேச மணிமாலை

## காப்பு

திருச்சானூர் தேவியின்
திருவருள் வேண்டும்,
திருமாலைப் பாடி
திருவடி வணங்க
திருச்சானூர் தேவியின்
திருவருள் வேண்டும்!

ஒருக்காலும் மறவாத
உளமிருக்க, நினைக்க
திருக்கோலம் நெஞ்சில்
நிலைத்திருக்க என்றும்,
திருச்சானூர் தேவியின்
திருவருள் வேண்டும்!

மறுக்காமல் அருள்வாய்
மகா லஷ்மி
மணக்கும் பாக்களில்
பொருளாய் நீயிருந்து
மறுக்காமல் அருள்வாய்
மகா லஷ்மி!

தாமரைப் பூக்கொண்டு
உனைத் துதித்தேன்,
சந்நிதி வணங்கி
மனம் பதித்தேன்!
மறுக்காமல் அருள்வாய்
மகா லஷ்மி!
திருச்சானூர் தேவியின்
திருவருள் வேண்டும்!



# ஆச்சார்யன் திருவடிகளே சரணம்



வேங்கட பதியின் திருவருள் வேண்டி
விண்ணப் பிக்கும் தமிழ்ப்பா சுவையில்
தேன்குட மாக தேசிகன் அருள்க!

---

நம்மாழ்வார் என்று
நாரணனே சொன்னவர்,
வைஷ்ணவமே வாழ்வுக்கு
வழிகாட்டி என்றவர்!

செம்மாந்த இலக்கியச்
சித்தாந்தப் பெருங்கடல்
பெம்மானின் சேவையே
பேறென்று வாழ்ந்தவர்!

எம்மான் ஆழ்வார்
திருநகரித் தேவன்
அம்மானை வணங்கினேன்
அருள்வான் நல்வாக்கு!



# சுப்ரபாதம்

மார்கழி மாதம் வைகறை நேரம்
மாதவா கேசவா மைவிழி திறவாய்!
மங்கல இசையுடன் தமிழ்ப்பண் ஒலிக்க
கண்ணா கார்மேக வண்ணா எழுவாய்!

பார்புகழ் வேங்கட பதியின் நாயகா
ஆர்கலி தீர்க்க அறிதுயில் கொண்டவா,
பார்வைச் செங்கண் பரிதி ஒளிவிட
பார்கவி பாடினேன், பைய இமைதிறவாய்!

குவிமலரும் விரிந்ததுகாண் கோவில்மணி ஒலித்ததுகாண்
நவில்தேவர் சூழ்ந்திருக்க நாற்றிசையும் கைகூப்ப
கவியமுதம் சுவைத்து கண்ணமுதம் தந்தருள
புவிஏழும் புரப்பவனே போதுஇது விழி திறவாய்!





# நடைப்பயணம்

ஆயிரம் கோடி
விழிகளில் தரிசனம்!
ஆங்கே கோவிந்த
நாம சங்கீர்த்தனம்!

பாயிரம் பாடியே
பயணம் தொடங்கினேன்
பதி திருப்பதி - மலைப்
படிகளில் ஏறினேன்!

கோயிலாம் திருமலை
கோபுரம் எதிரே
கோதையின் மாலை
சூடினோன் உள்ளே!

வேய்ங்குழல் வேந்தனை
காணத் தவித்தே
வாயி லடைந்தேன்,
வாழி வெங்கடேசா!

இயக்கிய பக்தியால்
எளிதில் பிரகாரம்
எல்லாம் கடந்தவன்
எதிரில் நின்றேன்!



மயக்க மறுத்தேன்
இமைக்க மறந்தேன்!
மாலை மாலையாய்
கண்ணீர் வடித்தேன்!

வியக்கும் விஸ்வ
ரூப தரிசனம்
விடியும் வேளையில்
கிடைத்தது பாக்கியம்!

தயங்கும் ஜீவனை
தடுத்தாட் கொள்ளவே
தான் ஏழு மலைமீது
நின்றாய், சத்தியம்!









# நின்ற திருக்கோலம்

பாற்கடல் பள்ளியில்
கிடந்தாய்!
பாண்டவர் தூதனாய்
நடந்தாய்!
பார்த்த சாரதியாய்
அமர்ந்தாய்!
பதி திருப்பதிதனில்
நிமிர்ந்தாய்!

நின்ற திருக்கோலம் கண்டேன்,
திருமேனி
என்ற சமுத்திரம் உண்டேன்,
விழியாலே!
வென்றவை தோற்றவை யாவும்
சமர்ப்பித்தேன்!

குன்றம் திருமலை
கோவிந்தன் நாமம்
ஒன்றே நிச்சயம்
ஒன்றே சத்தியம்
நன்றே இதுவென்று
நான் தேர்ந்து கொண்டேன்

நாராயணா! ஹரி நாராயணா!
நாராயணா! ஹரி நாராயணா!





# திருச்சூர்ணம்

பூத்த பொழில் காடு
புன்முறுவல்!
யாத்த செந்தமிழ்ப்பா
திருச்சூர்ணம்!

கோர்த்த மணிமார்பில்
கோவிந்தன்
சேர்த்த ஸ்ரீதேவி
நம் தாயார்!

காத்த கைத்தலங்கள்
தமிழ் வேதம்,
காட்டும் திருவடிகள்
அரண் நமக்கே!





# நிஜபாத தரிசனம்

நிஜபாத தரிசனம் கண்டேன்!
நிழலான இககசுகங்கள்
அற்பமென உணர்ந்தேன்
நிஜபாத தரிசனம் கண்டேன்!

புஜங்களில் சங்கொடு
சக்கரம் தாங்கினாய்!
புவிதனை வராக
மூக்கினில் ஏந்தினாய்!

கஜராஜன் கால், முதலை
கவ்விய வேளையில்
கருடனில் பறந்து
சக்கரம் ஏவினாய்! (நிஜபாத....)

கண்ணனாய் பிறந்து
கம்சனை வீழ்த்தினாய்!
மன்னனாய் துவாரகை
மகுடம் சூட்டினாய்!

சபையில் திரௌபதி
தன்மானம் கூட்டினாய்!
சகலரும் வணங்க
ஸ்ரீபாதம் காட்டினாய்! (நிஜபாத.)



பார்த்தனைக் காக்க
தேரை ஓட்டினாய்!
பாரோரை வழிநடத்த
கீதையை சாற்றினாய்!

ஊற்றாக கவிதையை
உள்ளத்தில் ஊட்டினாய்,
ஏற்றென் பாமாலை
இளநகை மீட்டினாய்! (நிஜபாத....)

## சங்கீர்த்தனம்

வனமெல்லாம் மரகதம்
வானெல்லாம் நீலம்
மனமெல்லாம் திருவடிகள்
வாக்கெல்லாம் கோவிந்தன்!

தினமெல்லாம் அவன்பூஜை
தெருவெல்லாம் சங்கீர்த்தனம்
உணர்வெல்லாம் பக்திவெள்ளம்
உறவெல்லாம் அவன்உறவே!



நினைவெல்லாம் திருச்சூர்ணம்
நிகழ்வெல்லாம் அவன்செயலே
கனவெல்லாம் திருமலையே
கவியெல்லாம் அவன்புகழே!

புனலெல்லாம் புஷ்கரணி
பூவெல்லாம் தோமாலை
வினையெல்லாம் வீழ்ந்ததுவே
வீடானது வைகுந்தம்!



## சுடர்க்கொடி

சூடிக்கொடுத்த
சுடர்க்கொடி நாச்சியார்,
பாடிக் கொடுத்தனள்
திருப்பாவை!

ஆடிக் களித்த
கோகுல கோபியர்
வாரிக் கொடுத்தனர்
தெள்ளமுதம்!

ஊடிக் கனிந்த ஸ்ரீதேவி
தன்னையே
கூடிக் கொடுத்தனள்,
நீ கொண்டாய்!

கோடி கொடுத்தாய்
கோவிந்தா, நின்
கோலம் மறப்பேனோ
வாழ்வினிலே!





# ஆத்ம சமர்ப்பணம்

நாழிகை கடந்து நாளானது
நாளும் நகர்ந்து இரவானது
காலைக் கதிரவன் சுடரானது
காவிரி போல்மனம் கூத்தாடுது!

ஆழி மழைக்கண்ணா உனைத் தேடுது
ஆரா அமுதனுன் புகழ் பாடுது
பூவிரி சோலைகள் போதவிழ் மலர்கள்
மாமலை வேங்கடம் மாபெரும் கோபுரம்,

கோவிலின் வாயிலில் கூப்பிய கோலத்தில்
கோவிந்தா கோவிந்தா கோவிந்தா வென
கூவிய மனதுடன் கூப்பிய கரத்துடன்
ஆவி அடைக்கல மானது காத்தருள்!

தேவியை ஏந்திய மார்பினைக் கண்டேன்
தேடிய பாதம் நான்பற்றிக் கொண்டேன்
பாவியேன் கடைத்தேறும் பாதையைக் காட்டுவாய்
பற்றிய வினைகளைப் பஞ்செசன ஊதுவாய்!

நாராணயா! ஹரிநாராயணா!
நாராயணா! ஹரி நாராயணா!





# திருக்கல்யாணம்

திருச்சானூர் தேவி திருப்பதி மலைவாசன்
திருக் கல்யாண வைபோகமே!
மருக்கொழுந்து வாசம் மாவிலை தோரணம்
மணிமுத்துப் பந்தல் பூலோகமே!

கடைக் கண்ணாலே திருமகள் நோக்க
கள்ளச் சிரிப்பினால் மாலவன் கேட்க
இமைப்பில் அரங்கேறும் நாடகம் காண
எத்தனை பிறவி தவமிருந் தேனோ?

அம்மி மிதித்து அருந்ததி பார்த்து
அடியைப் பற்றி அணிகலன் பூட்டி
ஸ்ரீதேவி சமேதனாய் ஸ்ரீவேங்க டேசன்
வலம்வர கல்யாண வைபோகமே!

மேளங்கள் முழங்க மேகங்கள் பூச்சிந்த
தேவர்கள் துதிக்க திசையெல்லாம் களிக்க
மங்கலநாண் தேவி மார்பில் அரங்கேற
ஆனந்தம், ஆனந்தம் ஆனந்தமே!





# பல்லாண்டு பல்லாண்டு

மலையப்ப ஸ்வாமிக்கு
பல்லாண்டு பல்லாண்டு
மலைநகராம் திருப்பதிக்கு
பல்லாண்டு பல்லாண்டு!

திருத்துழாய் வேந்தனுக்கு
பல்லாண்டு பல்லாண்டு
திருமகள் சமேதனுக்கு
பல்லாண்டு பல்லாண்டு!

திருவடியாம் கருடனுக்கு
பல்லாண்டு பல்லாண்டு
திண்தோள்சேர் சக்கரம்
சங்கிற்கும் பல்லாண்டு!

அயனமர்ந்த உந்திக்கு
பல்லாண்டு பல்லாண்டு
சயனமாம் அனந்தனுக்கும்
பல்லாண்டு பல்லாண்டு!

அமுதூறும் பாற்கடலே
பல்லாண்டு பல்லாண்டு
ஆழ்வார்கள் அனைவருக்கும்
பல்லாண்டு பல்லாண்டு!





## சரணம்!

ஆள்வினை வேண்டும் ஆக்கமும் வேண்டும்
அன்றாடப் பணிகள் நிறைவுற வேண்டும்
ஊழ்வினை பொடிபட உன்னருள் வேண்டும்
உண்மையில் உள்ளம் தோய்வுற வேண்டும்!

வாழ்வில் சுற்றம் வளமுற வேண்டும்
வாக்கு மனமுடல் வழிபட வேண்டும்
தோள்களில் சங்கு சக்கரம் தரித்தோய்
தூய திருவடி சரணம்! சரணம்!

*மங்களம்*



## நிறைவுரை

### *ஓம் நமோ பகவதே வாசுதேவாய*

ஸ்ரீ காஞ்சி மகாஸ்வாமி 120 ஜயந்தி ஆண்டு வெளியீடுகளாக ஸௌந்தர்யலஹரி, கனகதாரா, சுப்ரமண்ய புஜங்கம் ஆகிய ஸ்தோத்திரங்களின் தமிழ்க்கவியாக்கம், அகிலாண்டேஸ்வரி மற்றும் சமயபுரம் மாரியம்மன் பாமாலைகள், விஷ்ணு சகஸ்ரநாமம், விநாயகர் துதிப்பாடல்கள், வில்வாஷ்டகம், ஸ்ரீ துர்கா பஞ்சரத்ன ஸ்தோத்திரம், அபிராமி அந்தாதி, கந்தசஷ்டிகவசம் - நிறைவாக - ஸ்ரீ வேங்கடேச மணிமாலை ஆகியவை சிறிய அளவில் பதிப்பிக்கப்பட்டு ஒவ்வொரும் தமிழ் மாதமும் அனுஷ நட்சத்திர நாளன்று பக்தர்களுக்கு பிரசாதமாக வழங்கப்பட்டது.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி **ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள்** அவர்களிடம் கனகதாரா தமிழாக்கத்தை நேரில் சமர்ப்பித்தோம். வெண்பாக்களை புன்னகையுடன் வாசித்து விட்டு ஆசிகூறி பிரசாதம் வழங்கினார்கள்.

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர சிவாச்சார்ய ஸ்வாமிகள்** (செம்பாக்கம் தசமகாவித்யாபீடம்) இம்முயற்சியை பாராட்டி பீடத்தின் ஆண்டு விழா (19-01-14) நிகழ்ச்சியில் கலந்துகொண்ட பக்தர்கள் அனைவருக்கும்



ஸௌந்தர்யலஹரியின் தமிழாக்க நூலை பிரசாதமாக வழங்கியதோடு ஆசிரியரையும் பொன்னாடை போர்த்தி சான்றிதழ் வழங்கி கௌரவித்தார்கள். (விழா நடைபெற்றது தி.நகர், வாணி மஹால் - ஸ்ரீ காஞ்சி மஹா ஸ்வாமி அரங்கில்)

ஸௌந்தர்யலஹரி தமிழ்கவியாக்கத்தை பாராட்டி **எழுத்துச் சித்தர் பாலகுமாரன்** குமுதம் பக்தி இதழில் எழுதியதைத் தொடர்ந்து நிறைய வாசகர்கள் அந்நூல் கேட்டு விண்ணப்பித்தனர். நண்பர்கள் கௌரிஷங்கர், சந்திரசேகர், ஹேமா ஆகியோரின் உதவியுடன் பெரும்பாலான வாசகர்களுக்கு பிரதிகள் அனுப்பிவைக்கப்பட்டன. நண்பர்கள் வரதராஜன், தம்பிபாலு, சண்முக சுந்தரம் ஆகியோர் உரிய தகவல்கள் தந்து உதவினர்.

கோவை வாசகி பேராசிரியை **திருமதி ஜானகி** அவர்கள் ஸௌந்தர்ய லஹரி தமிழ் நூலை கயிலாயத்தின் அடிவாரத்தில் (பரிக்ரமா) வைத்து பூஜித்து நம்மிடம் கொண்டுவந்து சேர்ப்பித்தார்கள் பலவாசகர்கள், நேரிலும், கடிதம் மற்றும் தொலைபேசி வாயிலாகவும் இந்த ஆன்மீகமுயற்சியை வாழ்த்தி உற்சாகமூட்டினர். எனது குடும்பத்தாரும், சகோதரிகள் குடும்பமும், நண்பர்களும் நூல் வெளியிடும் பொறுப்பை பகிர்ந்து கொண்டனர்.

லாப நோக்கமின்றி பெரம்பூர் **கிளாசிக் பிரின்ட்ஸ்** மற்றும் **ஷார்ப் பிரண்டர்ஸ்** நிறுவனத்தார் பாசுரங்களை அச்சிட்டுத் தந்தனர்.

**ஸ்ரீ ஆனந்த நிலையம் பதிப்பகத்தார்** (7/14, புதூர் முதல் தெரு, அசோக் நகர், சென்னை 83 போன்: 044-2474 5655) ஸௌந்தர்யலஹரி, கனகதாரா மொழிபெயர்ப்பு கவிதைகளை அடக்க விலையில் வெளியிட்டு உள்ளனர். சுப்ரமணிய புஜங்கமும் சேர்த்து ஒரே நூலாக வெளிவர உள்ளது.

திருவருளும் குருவருளும் துணை நின்றதால் இப்பணி சிறப்புற நிறைவேறியது.

அனைவருக்கும் நன்றி!

ஜய ஜய சங்கர! ஹர ஹர சங்கர!

தென்னாடுடைய சிவனே போற்றி!

எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!

குற்றாலம் வள்ளிநாயகம்

சென்னை - 82
18-04-2014